# குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தினால். . .

**அ**வன், தந்தை – கொலையுண்ட நான்கு குழந்தைகள் அவனுடையவை – அதுவும் அவனாலேயே கொலையுண்டன.

கொடுமை என்று அனைவரும் கூறுவர், இதனை.

தான் பெற்ற செல்வங்களை – தான் வளர்த்த சேய்களை – அவைகள் சிரித்தால் மகிழ்ந்து, வாடினால் வருந்தி, வளர்த்த தந்தை கொன்றான்.

என்ன விசித்திரம் காண்பீர். விசித்திரமல்ல வேதனை தரும் உண்மை நிகழ்ச்சி. ஈரோடு தாலுக்காவைச் சேர்ந்த கருமகவுண்டன் பாளையத்தில் நடைபெற்றது, இது.

தவறிழைத்த குழந்தைகளைத் தண்டித்துத் திருத்தும் உரிமை பெற்றுள்ள தந்தை கொன்றிருக்கிறான் குழந்தைகள் கொடுமை புரிந்தன, குற்றமிழைத்தன என்று அல்ல – அவைகளின் மீது வைத்திருந்த வாஞ்சைக்காகவும், மாறாத அன்புக்காகவும், மக்கள் மீது கொண்டிருந்த பாசம் – அவனைக் கொலை செய்யத் தூண்டியது – கொலைகாரனாக்கிற்று.

'மரண தண்டனை' – என்று கோர்ட்டார் தீர்ப்பளித்து விட்டார்கள்.

''மரண தண்டனை இவனுக்குப் போதாது சித்திரவதை செய்ய வேண்டும் இவனை – அதுவே இந்தக் கொடுமையாளனுக்கேற்ற சரியான தண்டனை!'' – நீதி அளிக்கும் பொறுப்பு தங்களுக்குத்தான் உண்டு என்பதாக எண்ணிக் கொண்டிருப்பவர்கள், கூறுவது.

''பெற்ற குழந்தைகளையே கொன்றானே, பாவி, அவன் தந்தையா? பெரும் அரக்கன்!'' இப்படிப் பேசுகிறார்கள், சிலர்.

''ஆம்-நான்தான் கொன்றேன்! நான் அரக்கன் – கொடியவன் – இரக்கமற்றவன் – எப்படி வேண்டுமானாலும் என்னைக் கூறுங்கள். ஏசுங்கள் – எனக்குக் கவலையில்லை. என் நிலையை அறியாத, அதன் தூய்மையினை உணராதவர்கள் எதைக் கூறினால் எனக்கென்ன கவலை? நான் குற்றவாளிதான்! தண்டிக்கப்பட வேண்டியவன்தான்! எனக் கேள்வியுற்றதும் நான் கொண்ட மகிழ்ச்சிக்கு எந்தப் பாசம் தூண்டுகோலாக இருந்ததோ, அதே அன்பின் – அதே பாசத்தின் காரண மாகத்தான், என் குழந்தைகளை நானே கொன்றேன். ஒப்புமா இதனை இவ்வையகம்? என் பொறுப்பையும், கடமையையும் எண்ணித்தான், என் மக்களுக்கு நிலையான அமைதியைத் தேடித் தந்தேன். எந்தக் குழந்தைகளைக் காப்பாற்ற அரும்பாடு பட்டேனோ, அந்தக் குழந்தைகளை அரிவாளால் வெட்டினேன். நானும் உத்தரத்தில் கயிற்றை மாட்டிக் கழுத்தில் சுருக்கிட்டுக் கொண்டேன். இன்று ஏசுகிறதே அந்தச் சமுதாயம், என்னைத் தூக்குக் கயிற்றிலிருந்து காப்பாற்றிற்று.''

''காண்பவர்களிடமெல்லாம் என் கதியைக் கூறி, கண்ணீர் காட்டி, கெஞ்சி, வேலை கொடுங்கள் என்று கேட்டபொழுது, 'ஐயோ பாவம், நான்கு குழந்தைகளுக்குத் தகப்பனாயிற்றே! அவர்களைக் காப்பாற்ற வேண்டிய கடமை உடையவனாயிற்றே, இவனுக்கு ஏதாவது ஒரு வேலை கொடுப்பதன் மூலம், இவனையும் இவன் குடும்பத்தையும் காப்பாற்றுவோம்' என்று எண்ணாமல், 'எப்படியோ போகட்டும், கெட்டு அழியட்டும், நமக்கென்ன கவலை' என்றிருந்த சமுதாயந்தான், மூன்று பிணங்களும், ஒன்று குற்றுயிராகவும் இருப்பதைக் கண்டதும், என்னை ஏசுகிறது.''

''என் வயிற்றைக் காட்டி, வாடி வதங்கும் குழந்தைகளின் நிலையைக் கூறி வேலை கேட்டபோது, 'சீ போடா, வீணனே!' வேறு இடம் போ, இங்கு உனக்கு வேலை இல்லை' என்று கூறிய சமுதாயம், மனைவி உண்டு எனக் கூறி வேலை கேட்ட போது, 'மனைவி ஒரு கேடா' எனக் கிண்டல் கலந்த கேலி செய்த சமுதாயம் என்னைத் தூக்குக் கயிற்றிலிருந்து காப்பாற்றிற்று நீதி கூற முன் வருகிறது.''

இவ்வாறு கூறிக் கொண்டது அவன் உள்ளம்.

மனைவியின் கண்களில் பெருகும் நீர் – குழந்தைகளின் பரிதாபக் குரல் – கருணை காட்டாத சமுதாயம் ஆகியவை அவனை வேதனையிலாழ்த்தியது.

மனைவி, நான்கு குழந்தைகள் – அவைகளைக் காப்பற்ற வேண்டிய பொறுப்பும், எப்படிச் சாத்தியமாகும் என்பதால் ஏற்படும் அவநம்பிக்கையும் அவன் உள்ளத்தில் மேலும் வேதனையை உண்டாக்கிற்று.

வேலை தேடினான் – தேடினான் – எங்கும் இல்லை என்ற நிலை.

ஒருநாள் வேலை தேடி அலுத்து வீடு வந்து சேர்ந்தான். யோசித்தான் – யோசித்தான் – மூன்று நாட்கள் யோசித்தான்.

மனைவி வயல் வேலைக்குச் சென்று விட்டாள். தான் பெற்ற செல்வங்கள் 'பசிக்கிறது' என்று கூறுவதற்கும் சக்தி இழந்த நிலையினைக் கண்டான். அவைகளை இந்த வேதனையோடு விட்டு வைக்க எண்ணவில்லை. தான் மட்டும் எங்காவது ஓடிவிடவோ – சாவை தேடிக் கொள்ளவோ அவனால் முடியவில்லை – குழந்தைகளின்மீது கொண்ட அன்பால். தான் ஓடி விட்டால் இல்லை – இறந்துவிட்டால் அவைகளின் நிலை! இவைகளையெல்லாம் எண்ணிப் பார்த்தான். இந்தத் துன்பத்திற்கு முடிவுகட்டத் தீர்மானித்து விட்டான். எவர் தயவும் தாட்சண்யமும் தன் முடிவிற்குத் தேவையில்லை என எண்ணினான். அதற்கான உரிமை தனக்கிருப்பதாக உறுதியான நம்பிக்கை கொண்டான். தெருக் கதவைத் தாளிட்டான். எடுத்தான் அரிவாளை! ஒன்று – இரண்டு – மூன்று – நான்கு ஆக நால்வரையும் கொன்றான் – தானும் சுருக்கிட்டுக் கொண்டான்.

வேலை தேடும்போது இரக்கப்படாத சமுதாயம், குழந்தை குட்டிக்காரன் வறுமையால் வாடுவதைத் தடுக்காத சமுதாயம் தூக்குக் கயிற்றிலிருந்து அவனைக் காப்பாற்றியது.

வாடும்போது வாழ்வளிக்காத சர்க்கார், மரண தண்டனை விதித்து விட்டது அவனுக்கு.

கொலை செய்தான், ரங்கசாமி! ஆம், அதுதான் அவன் பெயர். தீர்ப்பளித்துவிட்டார்கள், கோர்ட்டார், மரண தண்டனை என்று.

தீர்ப்பளித்த நீதிபதி, ''தந்தை என்ற முறையில் குழந்தைகளைப் பராமரிக்கும் பாரத்தை ஏற்றுக் கொள்ளும் சக்தி அவருக்கு இல்லை, குழந்தைகளைக் காப்பாற்றுவதில் அவர் ஓரளவு கஷ்டத்தை அனுபவித்திருக்கிறார். அதில் அவருக்கு எரிச்சலும் ஏற்பட்டிருக்கிறது, எனவே அவைகளிலிருந்து நழுவி தப்பித்துக் கொள்ள இக்காரியங்களை அவர் செய்துவிட்டார்'' என்று கூறியுள்ளார்.

''குழந்தைகளைப் பராமரிக்கும் சக்தி அவருக்கு இல்லை'' எனக் கூறியிருக்கிறார் நீதிபதி. ஏன் இல்லை? இல்லாமலா இவ்வளவு நாள் காப்பாற்றி வந்தான். சோம்பேறியா? இல்லையே! வேலை செய்யத் தயாராயிருந்தான்! குழந்தைகளைக் காக்கத் தயாராயிருந்தான், ஆனால் வேலை இல்லை. இதற்கு விளக்கம் தரவில்லை நீதிபதி.

குழந்தைகளைக் காப்பாற்றுவதில் அவர் ஓரளவு கஷ்டத்தை அனுபவித்திருக்கிறார். அதில் அவருக்கு எரிச்சலும் ஏற்பட்டிருக்கிறது என்கிறார். எரிச்சல் ஏற்பட்டிருந்தால் எங்காவது ஓடி விட்டிருப்பானே. எரிச்சல் ஏற்படவில்லை, கடமையுணர்ச்சி ஏற்பட்டது. கதியற்றவன் தன் நிலைக்கு ஒரு முடிவு கட்டினான். கதியற்றநிலை ஏன் ஏற்பட்டிருக்கிறது இந்த நாட்டிலே! இதற்கு விளக்கம் தருவார்களா?

'அவைகளிலிருந்து நழுவித் தப்பித்துக் கொள்ள இக்காரியங்களை அவர் செய்து விட்டார்' எனக் கோர்ட்டார் தீர்ப்பளித்துவிட்டனர். நழுவித் தப்பித்துக் கொள்வதானால் அவர்களைத் தவிக்க விட்டுவிட்டுத் தன்னந்தனியனாய் ஓடி விட்டிருக்க வேண்டுமே! இல்லையே! அவர்களைத் தவிக்கவிட அவன் மனம் ஒப்பவில்லை. எனவே அவன் கொலைகாரனாக வேண்டியதாயிற்று.

தண்டனை தந்ததோடு நீதியின் வேலை முடிந்து விட்டது. சாக இருந்தவனைத் தடுத்து, நாங்கள் சாக்காட்டுக்கனுப்புகிறோம் என்கிறது, நீதி.

தண்டனை தந்தவர்கள், நாட்டிலே உள்ள வேலையில்லாத் திண்டாட்டத்தை, வறுமையை, நல்லவர்களையும் கொலைகாரர்களாக ஆக்கிவிடும் வறுமையை ஒழிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டியவர்கள் யார்? என்பதைக் கூறவில்லை.

மரண தண்டனையை ஏற்ற ரங்கசாமி, நீதிபதி நிலையிலிருந்தால், தன்னைக் கொலைகாரனாக ஆக்கிய சமுதாயத்தையும், தான் குற்றம் செய்த பிறகு தன்னைக் குற்றம் சாட்டி ஏசும் சமுதாயத்தையும், தன்னைக் காப்பாற்ற வேண்டிய கடமை ஆளவந்தார்களுக்கு இருக்கிறது என்பதை உணர்த்தாது, தண்டனை கொடுக்க மட்டும் சக்தியுடைய சட்டத்தையும், குற்றவாளிக் கூண்டிலே கொண்டு வந்து நிறுத்தி, தன் மக்களைக் காக்க வழி வகுக்க வகையற்ற சர்க்காருக்கு, மக்கள் அனைவருக்கும் பிழைப்பளிக்கும் பொறுப்பற்ற சர்க்காருக்கு, மக்களைத் தண்டிக்க மட்டும் உரிமை எங்கிருந்து வந்து விட்டது என்றல்லவா கேட்டிருப்பான்?

**29-3-1953**

